முன்னரே அவனை மணமகள் முதலிற்பார்த்துவிட்டால், கணவனின் அத்யந்தப்பிரியத்திற்குப்பாத்ரமாவாள் என்பதும், அந்நாட்டாரின் கொள்கை.

யூததேசத்து (Jewish Custom) வழக்கம், தம்பதிகள் இருவரும் கலியாணதினத்தன்று ஒரேபாத்திரத்திற் பானமருந்துவதும், அதனை உடனே, உடைப்பதுமாம். அப்படி உடைப்பதுவே இப் புன்மையான உலகின் ஸுகஸௌக்கியங்களெல்லாம், நிலையற்றன, அழிந்துவிடத்தக்கன என்பதைக்காட்டுமாம்.

கோரியா, ஜப்பான்தேசங்களிற்பெண்கள், கலியாணமானவர்கள், ஆகாதவர்கள், என்று அவர்கள் தலைப்பின்னலினின்று அறியலாம். இந்தியாபோன்ற கீழைநாடுகளிற் பெண்கள் உடையினின்றே இதனை அறியலாம். இளம்வயதுள்ள கலியாணமாகாதவாலிபன் கோரியாவில் வெறுந்தலையுடன் முதுகின்பின்னால் ஒருசுருட்டைமயிர் தொங்கு மாறுபோவான். அவன் கலியாணம்பண்ணிக்கொண்டதும், தலைமயிர் நன்றாகக்கட்டப்பெற்றுத் தலையின்மீதேறும். தங்கள்கறுப்புமயிரின் அழகும் பருமனும் குறைந்துபோகாவண்ணம் பார்த்துக்கொள்வதிற் கோரியாதேசத்தவர், இந்துதேசத்தவர்முதலியோர் ஜாக்கிரதையுள்ள வர்கள். மயிர் நிறைய இருக்கிறது என்றுகாட்டுவதற்காகப்பொய் மயிர்களைப்போன்ற சவரியை உபயோகப்படுத்துவதுண்டு. கோரி யப்பெண்கள் பொய்மயிர்களை உபயோகப்படுத்திக் கட்டுகள்கட்டித் தலைமேல் ஊசிசெருகி ஜாக்ரதையாய்வைத்துக்கொள்வதுண்டு. கோரியாவில் ஏழைகள், தங்கள் தலைமயிர்களைத் தலைமுண்டாசுகட்டிக் கொள்வதுபோல், தலைமீது சுருட்டிவைத்துக்கொள்வதுமுண்டு.

வீ. சுப்ரமணியஐயர்.

தமிழ்ப்பண்டிதர்,

முனிசிபல்ஹைஸ்கூல், மாயூரம்.

# புத்தகமதிப்புரை.

1. நம்முடைய கடமைகளும், ஜேர்மனியின் கொடுமையான செய்கையும்:—(ராஜத்தின்தேளிபோருட்டபம்—2.) இச் சிறுபுத்தகம், உறந்தை கி. ராஜகோபாலன் என்பவராலெழுதப்பெற்றது. இதில் நம் சிறுவர்களும் தெரிந்துகொள்ளவேண்டிய சில அரசியல்முறைகளையும், அவற்றாலுள்ள நன்மைகளையும் விவரித்திருப்பதுடன், மாதா, பிதா, குரு, தெய்வம், அரசன் இவர்களிடத்து விசுவசிப்புடனிருக்கவேண்டுவது நமதுகடமையென்றுபோதித்திருப்பது திருப்திகரமாயிருக்கிறது. இதன்விலை அணா 2.

2. வில்லியம் எவர்ட் கிலாட்ஸ்டன் சரிதம்:–இது கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் உபாத்தியாயராயிருந்த கே. வேங்கடராமையர் பி. ஏ. அவர்களால் எழுதப்பட்டது. இது உலகப்பிரவித்திபெற்ற கிலாட்ஸ்டன் பிரபுவினுடைய ஜீவியசரித்திரத்தின் சுருக்கமாயவரது ஒழுக்க வழக்கங்களையும், குணவிசேஷங்களையும் தமிழ்மக்கள் நன்குணருமாறு தெளிவாயெழுதப்பெற்றிருக்கிறது. இதன்விலை அணா 8.

3. பெண்கள் நீதிவிளக்க வினாவிடை:—இது மயிலாப்பூர்க் குப்புஸாமிநாயகராலெழுதப்பட்டது. இதில் இந்தியப்பெண்மக்களுக்குரிய வொழுக்கவழக்கங்களையும் கற்புநிலைமுதலிய கடமைகளையும் பற்றிப் பிராசீனமுறையைத்தழுவி யுக்தியுக்தமாகவும், சாஸ்த்ரஸம்மதமாகவும் வினாவிடைநடையில் விளக்கி யெழுதப்பட்டிருக்கிறது. இதன் விலை அணா 4.

மேற்கண்டபுத்தகங்கள் வேண்டுவோர் ஆக்கியோர்க் கெழுதிப் பெறலாம்.

4. காதல்வேற்றி:–இது, வி. பி. கிருஷ்ணஸ்வாமி பி. ஏ. அவர்களால் எழுதப்பட்டதொரு சிறிய தமிழ்நாவல். இதில் ஒருபெண் தனது மனசுக்குப்பிடித்தவாலிபனை விவாகம்செய்துகொண்டதாகக் கதையைக்கற்பித்து, கணவருக்கடங்காதமனைவியரியல்பும், மனைவிகட்கடங்கிய கணவர்களியல்பும், பிறவும் வேடிக்கையா யெழுதப்பட்டுள்ளன. இதன்விலை அணா 4. ஜனுபிமானியின் சந்தாதார்களுக்கு மாத்திரம் அணா 3. வேண்டுவோர் ஜி. ஏ. வைத்யராமன் அண்ட் கம்பெனி, 3—4 கொண்டிசெட்டிதெரு, மதராஸ். என்று எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

புத்திராதிபர்

# விளம்பரம்.

மதுரைத் தமிழ்ச்சங்கத்தினின்றும் மாதந்தோறும் பிரசுரமாகும் "செந்தமிழ்"ப்பத்திரிகைக்குப் பெரும்பான்மையும் தமிழிலக்கிய இலக்கணவிஷயங்களும், தமிழ்நாட்டுப் புராதனசரிதங்களும், சாஸனங்களும், வடமொழியினும் ஆங்கிலத்தினும் தமிழிற்கு வேண்டுவன வாக்கக்கருதப்படும் சாஸ்திரமொழிபெயர்ப்புகளும், ஒன்றையொன்றிகழாச்சமயக்கொள்கைகளும், தமிழின் அருமைபெருமைகளைக்காட்டும் ஆராய்ச்சிவிஷயங்களுமாகிய விஷயதானம்செய்வோர்க்கு, 'செந்தமிழ்'ப்பக்கம் 1-க்கு வியாஸத்துக்குத்தக்கவாறு 8 அணு முதல் 2 ரூபா வரை ஸம்பாவனை கொடுக்கப்பெறும். இந்த ஸம்பாவனை வியாசங்கள் ஒப்புக்கொள்ளப்பட்டுப் பிரசுரமானபிறகே எழுதியநிருபருக்கு அனுப்பலாகும். ஏற்றுக்கொள்ளப் படாத விஷயதானங்களை நிருபர்களுக்குத்திரும்பத் தேவையாயிருந்தால் அவர்கள் தபாற்செலவிலேயே அனுப்பப்பெறும்.

B. இராஜராஜேஸ்வர ஸேதுபதி,

அக்கிராசநாதிபதி,

மதுரைத்தமிழ்ச்சங்கம்.

1915-ஆம் அக்டோபர்மீ 23உ

காலை 9-மணிக்குநடந்த மதுரைத்தமிழ்ச்சங்கத்தின் காரியநிர்வாஹஸபையில் முடிவுசெய்யப்பட்ட தீர்மானங்களின் விவரம்.

---

1. மாட்சிமைதங்கிய இராமநாதபுரம்ராஜா ஹிஸ் ஹைனெஸ். பா. ராஜராஜேஸ்வரசேதுபதியாகிய முத்துராமலிங்கசேதுபதியவர்கள்—அக்கிராசநாதிபதி.

2. மகா-ள-ள-ஸ்ரீ கான்பகதூர் H அப்துல்சுபான்சாஹிப் அவர்கள்.

3. ,, R. இராகவையங்கார் அவர்கள்.

4. ,, V. S. இராமஸ்வாமிசாஸ்திரியவர்கள், B. A., B. L.

5. ,, T. N. சுந்தரராஜ ஐயங்கார் அவர்கள், B. A , B. L., (கௌரவகாரியதரிசி.)

இவர்கள் வந்திருந்தார்கள்.

தீர்மானங்கள்:—

I—(1) மகா-ள-ள-ஸ்ரீ T. இராமஸ்வாமி ஐயங்கார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர், சூலூர், கோயம்புத்தூர்ஜில்லா.

(2) ,, K. சுப்பிரமணியபிள்ளை அவர்கள், M.A, Apprentice-at-law, மைலாப்பூர்.

இவர்களைச் சங்கத்தின் அங்கத்தினராக அங்கீகரிக்கலாயிற்று.

II. 1915ஆம் ஆகஸ்டு, செப்டம்பர்மாதங்களின் வரவு செலவு கணக்குகள், வாசித்து அங்கீகரிக்கலாயிற்று.

III. கல்வி அபிவிருத்திவிஷயமாய்ச் செய்யவேண்டிய காரியசம்பந்தமாகத் தொல்காப்பியச்செய்யுளியலும், பழமொழியும் இவ்வருஷம் அச்சிடும்படிக்கும், தமிழ்நாவலர்சரிதை, நீலகேசி இவற்றையும் கூடியமட்டில் அச்சிடவும் தீர்மானம்.

IV. சங்கம்கலாசாலைமாணவர்கள் படித்தபின் கலாசாலையை விட்டு நீங்கும்காலத்தில், அவர்கள்பெற்றுக்கொண்ட புஸ்தகங்களைக் கலாசாலைத் தலைமையுபாத்தியாயரிடம் ஒப்புவித்துவிடவேண்டியதாகத் தீர்மானம்.

V. சங்கமாபீஸ் டிரெடில் மெஷீனுக்குப் புதிதாகச் சக்கரம் ஒன்று வாங்கவேண்டியவிஷயம் கமிட்டியிற்கொண்டுவரவேண்டியது அனுவசியமென்றும், பிரசிடெண்டு அவர்களும் காரியதரிசிகளும் பைசல்செய்யவேண்டியவிஷயமென்றும் தீர்மானம்.

B. RAJA RAJESWARAN,
*President,*
Madura Tamil Sangam.

23—10—15.